# எனக்குப் பெயர் வைத்தவர்

திரு. ராமையாவைப் பற்றி எழுதத் தோன்றும் போது, பல்வேறு துறைகளில் அவர் சாதனைகளின் பரிச்சியம் எனக்கு இல்லை என்பது குறுக்கிடுகிறது. எனினும் அவருடைய தொடர்பு, என்னுடைய ஒரு குறிப்பிடக் கூடிய செயலுக்கு ஒரு விதத்தில் காரணமாகியது என்பதில், அவரைப் பற்றிய என் நினைவுகளை எழுத முற்படுகிறேன். நான் எப்போது எப்படி எழுத ஆரம்பித்தேன் எனச் சொல்லுவதில், அவருடைய பாதிப்பும் அவரைப் பற்றிய என் நினைவுகளும் கலந்து நிற்பதால் அவரைப் பற்றி உங்கள் மதிப்பீட்டிற்கு இவைகள் உதவலாம் என்ற எண்ணத்தில் எழுதுகிறேன்.

நான் எழுதிய சிறுகதைகளில் பாதிக்குமேல் அவர் பொறுப்பு வகித்து நடத்திய மணிக்கொடியில் பிரசுரமாயின. எனக்கு புனை பெயர் கொடுத்ததும் என் கதைகளுக்கு தலைப்புக் கொடுத்ததும் அவர்தான். தற்போது மனதிற் கொவ்வாத, தன்னடக்கமற்றதெனத் தோன்றும் சுயபுராண விபரங்களை வெளியிடுவதாகத் தோன்றினால் மன்னிக்கவும்.

35 ஆண்டுகளுக்கு முன் படித்து முடித்து, வேலைக் கென்று ஒன்றும் போகாமல் கும்பகோணத்தில் காலம் கழிக்கும் அநேக மாஜி மாணவர்களில் நானும் என் மனப்போக்கிற் கிசைந்த ஐந்தாறு பேர்கள் சேர்ந்த ஒரு கோஷ்டியில் ஒருவனானேன். ஆர்வ மிகுதியில் படித்தும்,

தெளிவு காண அநேக விஷயங்களைப் பற்றி விவாதித்தும் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தோம். எத்துறை என்பதின்றி, அரசியல் - சங்கீதம் - வேதாந்தம் - மொழிப்பிரச்னை - இலக்கியம் இத்யாதி எதையும் பற்றி ஆங்காங்கே அவ்வப்போது கூடிப் பேசுவது உண்டு.

1933-ம் வருஷத்தில் மகாமகம் வந்தது. அதற்காக ஒரு விரிவான கண்காட்சி ஒரு மாதம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த ஒரு மாத காலம் அம் மைதானத்தில் நாங்கள் கூடிப்பேசி பொழுதை கழித்தோம். அந்த சமயந்தான் திரு. ராமையா எங்களுக்கு அறிமுகமானது. அவர் கதர் போர்ட் ஸ்டாலுக்காக வந்திருந்தவர் என நினைக்கிறேன். எங்களுடைய நண்பர், ஒருவர் சென்னை யில் சட்ட கல்லூரியில் படித்தவருக்கு இவரை தெரிந்ததின் மூலமாக எங்களுக்கு அறிமுகமானார், எங்கள் மத்தியில் எங்கள் பேச்சிலும் கலந்து கொள்ளுவார்.

ஒருநாள் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கூறியது ஞாபகத்தில் இருக்கிறது. அதுதான் உள்ளூர பதிந்து ஒரு வருஷத்திற்கு மேலாக ஊறி என்னை எழுதும்படி தூண்டியதுபோலும். என்னைப் பார்த்து "நீங்கள் சிறுகதைகள் நன்றாக எழுத முடியுமென நினைக்கிறேன். மணிக்கொடி பத்திரிகைக்கு எழுதுங்கள்" என்று அவர் சொன்னார். எவ்விதத்தில் நான் சிறுகதை ஆசிரியனாக முடியும் என்று அவருக்குத் தோன்றியது என்பதை அவரால்தான் சொல்ல முடியும்! அப்போது அவருக்கு மணிக்கொடியில் தொடர்பு இருந்ததே தவிர பொறுப்பு இல்லை என்று நினைக்கிறேன். மகாமகம் முடிந்து ஒன்றரை வருஷங்கள் ஆகிவிட்டது. ராமையாவின் ஞாபகத்தோடு நான் சிறுகதை எழுதும் நோக்கமும் சென்று விட்டது.

35-ம் வருஷம் இறுதியில் ஏதோ ஒரு வேகத்தில் 6, 7, சிறுகதைகளும், ஒரு நெடுங்கதையும் எழுதினேன். பிரசுரிக்கும் நோக்கம் எனக்கும் இல்லை. எழுத முடிகிறதா,

என்று பார்க்கும் நோக்கம் போலும். மேலும் அதன் மதிப்பை தெரிந்து கொள்ள என் நண்பரில், துல்லிய இலக்கிய சுரணை உள்ள, ஒருவரிடம் கொடுத்து அவர் அபிப்பிராயத்தை கேட்டேன். அவர் சொன்னது நான் எதிர்பார்த்ததை விட கொஞ்சம் திடுக்கிட இருந்தது. ஒருவிதத்தில் அவைகள் உயர்தரமானதென்றும் தமிழில் அதுமாதிரி ஒன்றும் இருந்ததில்லை என்றும் மேலும் அதைப் போடக்கூடிய பத்திரிகைகள் கூட இல்லை என்றும் சொல்லிவிட்டு எப்படியாவது அதை பிரசுரிக்க ஏற்பாடும் செய்யும்படி சொன்னார்.

நான் எழுதியவைகளை, மேலே குறிப்பிட்ட என் வக்கீல் நண்பரிடம் அனுப்பி எந்தப் பத்திரிகை ஆசிரியரிட மாவது காட்டி போடத் தகுதியுள்ளதாயின் போடும்படியும் எழுதியிருந்தேன். பத்து தினங்களுக்குள் இவைகளை ராமையாவிடம் கொடுத்ததாயும், அதைப் படித்து மிக நன்றாக இருப்பதாகப் பாராட்டி தன் மணிக்கொடியிலேயே பிரசுரிப்பதாக அவர் சொன்னதாகவும் பதில் வந்தது.

1936 பிப்ரவரியில் என் முதல் கதை பிரசுரமாகியது. பிறகு ஏப்ரலில் நான் எழுதிய நாலாவதோ ஐந்தாவதோ இரண்டாவதாக 'காதல் சாலை' என்ற தலைப்பில் வெளிவந்தது. அது வந்தவுடன்தான் திரு பிச்சமூர்த்தி ராமையாவுக்கு அந்த ஆசிரியரைப் பற்றி விசாரித்து உள்ளூரிலேயே இருப்பது தெரிந்து கொண்டு எனக்கு அறிமுகமானார்.

சிறிது உரக்க சிந்தித்துப் பார்க்கலாம். என் கதைகளின் மதிப்பீட்டையும், 1935லிருந்து அவர் நடத்திய காலத்து மணிக்கொடியில் வந்த கதைகளின் மதிப் பீட்டையும் அவர் அவர்கள் மனப்போக்கிற்கு விட்டு விடுவோம். ஏனெனில் objective Value, என்பது உண்டா என்ற சர்ச்சைக்கு இப்போது இடம் வேண்டாம். 1935-ம் வருஷத்தில் டக்கர்ஸ்லேன், சாலேமான்ஷன்ஸிலிருந்து பிரசுரமாகி வந்த மணிக்கொடியை எண்ணிப் பார்ப்போம்.

பொருளாதார ரீதியில் எந்த லக்ஷியம் அவருக்கு அதை அப்படி நடத்த தெம்பு கொடுத்து நடத்த உதவியது? ஊதிய எண்ணமின்றியும், பிற்காலத்தில் தனக்குப் புகழ் வரலாம் என்ற ஹேஷ்ய நம்பிக்கையில் லக்ஷியத்தில் வாழ்ந்ததாக இருக்கட்டும். அவ்வளவு கதாசிரியர்களும் அவ்வளவு கதைகளை எந்தெந்த நோக்கத்தில் எழுதினார்களோ தெரியவில்லை. ஆனால் மணிக்கொடியில் ராமையா பிரசுரிக்க எழுதினார்கள். இது தான் முக்கியம்.

ஒன்று எனக்குத் தோன்றுகிறது. அதுவும் ஒரு பிடில் வித்வான் தன்பிள்ளைக்குச் சொன்ன சில வார்த்தைகள். 'சபையில் சரிகை குல்லாய் அங்கவஸ்திரத்தை முதல் வரிசையில் பார்த்து அவர்கள் தலையாட்டத்தை நம்பி மோசம் போகாதே. நாம் என்னவோ ரொம்ப நன்றாக வாசிக்கிறோம் என்று சௌக்யமாக அவர்களைப் பார்த்து நாம் சிரிக்க வேண்டியதுதான். சுற்றிப் பார்த்தால் சபையிலே ஒருவனாவது இல்லாமல் போகமாட்டான், அவன் மெய்மறந்து ரஸிப்பதை நன்றாகப் புரிந்து கொள்ளலாம். அவனுக்காக, அவன் ரஸிப்புக்காக வாசிக்கிறது தான் உன்னுடைய உயர்ந்த வாசிப்பாக இருக்கமுடியும்.' அவர் சொன்ன மாதிரிதான் அவ்வளவு ஆசிரியர்களும் எழுதினார்கள் என்று கொள்ளலாம்.

ராமையாவுடன் பழகியவர்களுக்கு அவருடைய இலக்கிய ரஸனையை நன்கு தெரிந்து கொள்ள முடியும். அவரவருக்குத் தகுந்த விஷயத்தை எழுதுவது படைப் பாளியின் திருப்திக்குப் போதும் போலும். ஆயிரமாயிரம் பேர்களின் போற்றுதலை வேண்டாது 500க்கு குறைந்த பிரசுரத்திற்கே தடுமாறின ஒரு பத்திரிகையில் வெளிவந்தது போதுமென்று எழுதியவர்கள் ஏன் எழுதினார்கள்? அவர்கள் எழுத்தின் மதிப்பீட்டை விட்டுத் தள்ளுங்கள்! இப்போது ராமையாவின் 60 வருட விழாவில் பார்க்க வேண்டாம். அவரது 600 வருட விழாவில் வேண்டுமானால் பார்க்கட்டும். ராமையாவின் இந்த சாதனையைத்தான் நான் அவரிடம் கண்டது.

– பி.எஸ். ராமையா மணிவிழா மலர் 1965